Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



கொள்கை

இனிமையுங் கூட கொள்கையின் உறுதியி லிருந்து பிறப்பதுதான்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்



சாட்சி

நீதி தான் சாட்சி, எனக்கு வேறு சாட்சி இல்லை.

-தந்தை பெரியார்

மலர்: 7 சென்னை 24 - 10 - 82 ஞாயிறு வெளியீடு 25 - 10 - 82 திங்கள் இதழ்: 9

கருணாநிதி கட்சியிலிருந்து விலகி முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில்

# கழகத்தில் சேர்ந்த 2000 தி.மு.கவினர்

## சென்னையில் தி. மு. க. காலியாகிறது

சென்னை. அக். 24-தி. மு. க வை சேர்ந்த 2 ஆயிரத்துக்கும் மேற்பட்ட தோழர்கள், அந்தக் கட்சியிலிருந்து விலகி இன்று காலை முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

இந்த இணைப்பு விழா சென்னை கலைவாணர் அரங்கில் நடந்தது. காலை 11-30 மணிக்கு விழா மேடைக்கு வந்த புரட்சித்தலைவர் 12-35 மணிவரை கழகத்தில் இணைந்த தோழர்களுக்கு மாலை அணிவித்தும், கை குலுக்கியும் வாழ்த்தினார்.

300க்கும் மேற்பட்ட தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுடன் வந்து புரட்சித் தலைவரிடம் வாழ்த்துப் பெற்றனர்.

தியாகராய நகர் பகுதியிலிருந்து 753 பேரும் ராயபுரம் பகுதியிலிருந்து 320 பேரும், ராதா கிருஷ்ணன் நகர் பகுதியிலிருந்து 235 பேரும், துறைமுகம் பகுதியிலிருந்து 131 பேரும், புரசவாக்கம் பகுதியிலிருந்து 154 பேரும், பூங்கா நகர் பகுதியிலிருந்து 26 பேரும், திருவல்லிக்கேணி பகுதியிலிருந்து 154 பேரும், பெரம்பூர் பகுதியிலிருந்து 18 பேரும், சைதைப் பகுதியிலிருந்து 200பேரும், அண்ணா நகர் பகுதியிலிருந்து 18 பேரும் இன்று கழகத்தில் இணைந்தனர்.

மதுராந்தகத்திலிருந்து டாக்டர் முருகேசன் தலைமையில் 200பேரும், செங்கல்பட்டு வழக்கறிஞர் ஜெகந்நாதன் தலைமையில் 4 வழக்கறிஞர்களும், அனைத்துக் கல்லூரி மாணவர் தலைவர் பரத்குமார், மீனம்பாக்கம் ஜெயின் கல்லூரி மாணவ செயலாளர்கள் வெங்கட்ராமன், பழனி, சுசில்குமார் ஆகியோரும் முதல்வர் புரட்சித் தலைவருக்கு மாலை அணிவித்து தங்களைக் கழகத்தில் இணைத்துக் கொண்டனர்.

முன்னதாக கழகத்தில் இணைந்த அனைவரும், அண்ணா சிலையிலிருந்து 'அண்ணா வாழ்க' 'புரட்சித்தலைவர் வாழ்க' என முழக்கமிட்டபடி கலைவாணர் அரங்கிற்கு ஊர்வலமாக வந்தனர்.

இந்த ஊர்வலத்தை அனைத்துலக எம்.ஜி.ஆர் மன்ற பொதுச்செயலாளர் திருச்சி சவுந்திரராசன், சென்னை மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் மதுசூதனன், சைதை துரைசாமி, ஜெ.பாலன், ராஜ்குமார் ஆகியோர் தலைமையேற்று நடத்தி வந்தனர்.

கழகத்தில் இணைந்தவர்களை வாழ்த்தி அமைச்சர்கள் கே. ஏ. கே., எஸ். டி. எஸ். அரங்கநாயகம், ராஜாமுகமது ஆகியோர் பேசினர்.

இந்த இணைப்பு விழாவில் அமைச்சர் பொன்னையனும் கலந்து கொண்டார்.

இந்த நிகழ்ச்சியை சென்னை மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் மதுசூதனன் ஏற்பாடு செய்திருந்தார்.

தி. மு. க. விலிருந்து விலகி கழகத்தில் இணைந்தவர்கள் தங்களின் தி.மு.க உறுப்பினர் அட்டைகளை முதல்வர் புரட்சித் தலைவரிடம் ஒப்படைத்து தாங்கள் அனைத்திந்திய அண்ணா தி.மு.க.வில் இணைவதாக அறிவித்தனர்.

### கருணாநிதி செய்த சதி: புரட்சித் தலைவர் தகவல்

தி. மு. க. விலிருந்து கழகத்தில் இணைந்தவர்களை வாழ்த்தி முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது;—

சில ஆண்டுகளுக்குப் பிறகு நான் சால்வையை அணிந்து வந்தேன். 1972ம் ஆண்டு அண்ணா தி. மு. க. தொடங்கவேண்டும் என்ற கட்டாயத்திற்குத் தள்ளப்பட்ட போது சால்வை அணிந்தேன். அதன்பிறகு தேவை இல்லை என்று நிறுத்திக்கொண்டேன்.

ஆனாலும் சில இடங்களுக்கு சால்வையுடன் சென்றிருக்கிறேன். இன்று சால்வையுடன் வந்துள்ளேன்.

இன்று காலை நான் வீட்டிலிருந்து புறப்பட்ட போது 1972ம் ஆண்டு அக்டோபர் மாதம் 10-ந் தேதி நினைவுக்கு வந்தது.

அன்று என்னைத் தூக்கி எறிந்த பிறகு நான் அதிர்ச்சி அடையவில்லை.

பிறகு ஒரு சில மாதங்களுக்குப்பின் நான் எழுதி வைத்திருந்த குறிப்பைப் படித்த போது எம்.ஜி.ஆர்.மன்றங்களை அழித்துவிட்டு — கழக நண்பர்களை என்னிடமிருந்து பிரித்துவிட்டு. காவல் துறையின் பக்கபலத்தால், எனக்கு ஆதரவு தருபவர்களை அச்சுறுத்தி சினிமாத் தொழிலில் என்னை வைத்துப் படம் எடுப்பவர்களைத் தடுத்து விட்டு பிறகு என்னைத் தூக்கி எறிய வேண்டும்

(2-ம் பக்கம் பார்க்க)



கழகத்தில் இணைந்த தோழர்கள். முதல்வர் புரட்சித் தலைவருக்கு மாலை அணிவித்தனர்.

★ ஒரு மாதத்தில் உடன்பாடு கையெழுத்தாகும்

குடிநீர்பிரச்சினைக்கு நிரந்தரதீர்வு:

# சென்னைக்கு கிருஷ்ணாநதி நீர்

## புரட்சித்தலைவர் எடுத்த பெருமுயற்சிக்குப் பலன்

சென்னை, அக. 24-தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் தொடர்ந்து எடுத்த பெருமுயற்சியின் காரணமாக சென்னைப் பெருநகருக்கு கிருஷ்ணா ஆற்றுநீர் கிடைக்க இருக்கிறது. இதற்கான உடன்பாடு இன்னும் ஒரு மாதத்தில் கையெழுத்தாக இருக்கிறது.

அண்மையில் புரட்சித் தலைவர் டெல்லி சென்ற போது பிரதமர் இந்திராவைச் சந்தித்தார். அப்போது அவர் கிருஷ்ணா நிதி நீர் திட்டம் துரிதமாகச் செயல்பட ஆந்திரத்திற்கும் மைய அரசு உதவவேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

அதனைத் தொடர்ந்து இன்னும் ஒருமாத காலத்தில் சென்னை நகருக்குக் கிருஷ்ணா நதிநீர் கிடைப்பதற்கான உடன்பாடு ஏற்பட இருக்கிறது. இதனை ஆந்திர மாநில முதல்வர் விஜயபாஸ்கர ரெட்டியே அறிவித்தார்.

1977ம் ஆண்டு அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம் ஆட்சிக்கு வந்தவுடன் சென்னைப் பெருநகருக்கு கிருஷ்ணாநதிநீர் கொண்டுவர முதல்வர் புரட்சித்தலைவர் நடவடிக்கை எடுத்துக் கொண்டார்.

ஆந்திரத்திலிருந்து பெண்ணாறு பாசனக் கால்வாய் மூலம் சென்னை நகருக்குக் குடிநீர் கொண்டுவரும் திட்டம் பற்றி ஆராயவேண்டுமானால் அதற்கு தமிழக அரசும் பணம் தரவேண்டும் என்று ஆந்திர மாநில அரசு கோரியது.

இந்தத் திட்டம் பற்றி ஆராய்வதற்கு என்ன செலவாகுமோ அதில் தமிழகத்தின் பங்குத் தொகையைத் தரத் தயாராக இருப்பதாக புரட்சித் தலைவர் தெரிவித்தார்.

அதன்படி திட்டப் பரிசீலனைக்கு ஆண்டுதோறும் தமிழக அரசு நிதி கொடுத்து வந்தது.

சென்னை நகருக்குக் கிருஷ்ணா நதியிலிருந்து தண்ணீர் கொண்டு வருவதற்கான பரிசீலனை முடிந்து விட்டது. அந்தத் திட்ட அறிக்கையும் தமிழக அரசுக்குக் கிடைத்துவிட்டது.

### முதல்வர் துரித நடவடிக்கை

அந்த அறிக்கை கிடைத்ததும் உடனடியாக கிருஷ்ணா நதி நீர்த் திட்டத்தை செயல்படுத்த முதல்வர் புரட்சித் தலைவர் நடவடிக்கை எடுத்தார்.

சென்னை நகருக்குக் கிருஷ்ணாநதி நீர்த் திட்டமும், ஆந்திராவில் 3லட்சம் ஏக்கருக்குப் பாசன வசதி அளிக்கும் திட்டமும் இணைந்து வந்தது.

### தமிழக அரசு தயார்

இந்தத் திட்டப் பணிக்கு 415 கோடி ரூபாய் செலவாகும்என்று கணிக்கப்பட்டது. இதில் தமிழகத்தின் பங்கு 130 கோடி ரூபாய் என்று தெரிவிக்கப் பட்டது. உடனடியாக 130 கோடி ரூபாயை முதலீடு செய்யத் தமிழக அரசு தயார் என்று புரட்சித்தலைவர் தெரிவித்தார்.

ஆனால் முந்திய ஆந்திர முதல்வர் பவனம் வெங்கட்ராமன் சென்னை வந்தபோது தமது அரசு நிதி நெருக்கடியில் இருப்பதாகத் தெரிவித்தார். இந்தத் திட்டப்பணிக்கு நிதி ஒதுக்க முடியாத நிலையில் இருப்பதாகவும் இதற்கு மத்திய அரசின் உதவி தேவை என்றும் குறிப்பிட்டார்.

மைய அரசின் உதவி பெற தமிழக முதல்வர் புரட்சித்தலைவரும் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

### நிதி தேவையை வலியுறுத்தினார்

ஆந்திரத்தின் நிலையை மைய அரசுக்கு தமிழக அரசும் தெரிவித்தது.

அண்மையில் புரட்சித் தலைவர் டெல்லியில் பிரதமர் இந்தராவை சந்தித்தார். சென்னை நகருக்கு கிருஷ்ணா நதிநீர்திட்டம் எவ்வளவு அவசியமானது என்பதனை எடுத்துக் கூறியதுடன் ஆந்திராவின் நிதித் தேவையையும் எடுத்துக் கூறி ஆந்திரத்திற்காகவும் வாதாடினார்.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் 1977-ம் ஆண்டிலிருந்து எடுத்த பெரு முயற்சிக்கு நல்ல பலன் கிடைத்திருக்கிறது.

சென்னை நகருக்குச் கிருஷ்ணாநதிநீர் கொண்டு வரும திட்டம் பற்றி இரு மாநில அதிகாரிகளும் பல முறை பேசி உடன்பாடு உருவாகும் நிலையை உருவாக்கியிருக்கிறார்கள்.

### அடுத்த மாதம் கை எழுத்தாகும்

சென்னை நகருக்குக் கிருஷ்ணா நதி நீர் வழங்கும் ஒப்பந்தம் அடுத்த மாதம் கையெழுத்தாகும் என்று ஆந்திர முதல்வர் விஜயபாஸ்கர ரெட்டி சென்னையில் நிருபர்களிடம் கூறினார்.

இந்த உடன்பாட்டில் கையொப்பமிட தமிழக முதல்வரை ஹைதராபாத்திற்கு அழைப்போம் என்றும் அவர் கூறினார்.

தமிழக முதல்வர், பிரதமர் இந்திராவைச்

(2-ம் பக்கம் பார்க்க)

# புதுவை அரசின் மதிய உணவுத் திட்டத்தில் பயங்கர ஊழல்

பாண்டிச்சேரி, அக். 24- புதுவை மாநிலத்தில் இலவச மதிய உணவுத் திட்டத்திலும், கோழி வளர்ப்புத் திட்டத்திலும் பல முறைகேடுகள் நடந்து இருக்கின்றன.

இந்த முறைகேடுகளை இந்திய ஆடிட்டர் ஜெனரல் தமது அறிக்கையில் அம்பலப்படுத்தியிருக்கிறார்.

1981-82ம் ஆண்டுக்கான இந்திய ஆடிட்டர் ஜெனரல் அறிக்கை புதுவை சட்டமன்றத்தில்சமர்ப்பிக்கப்பட்டது.

மதிய உணவுத் திட்டத்திற்காக மதிப்பீடு செய்யப்பட்ட தொகையில் 60 சதவிகிதம் மட்டுமே செலவிடப்பட்டிருக்கிறது.

இந்தத் திட்டத்திற்கு மத்திய அரசின் நிதி உதவியைப் போதிய அளவு கேட்டுப் பெறவில்லை.

இலவச உணவுத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்கு முன்னர் கிராமத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அந்தக் கிராமத்தின் பொருளாதார நிலை என்ன—மக்களின் வாழ்க்கைநிலைஎன்னஎன்று சர்வே நடத்தவேண்டும். அப்படி எந்தச் சர்வேயும் நடத்தப் படவில்லை. ஏதோ இலவச மதிய உணவுத் திட்டத்தை தாங்களும் செயல் படுத்தினோம் என்று ஒப்புக்காக செயல்படுத்தியிருக்கிறார்கள்.

இலவச மதிய உணவுத் திட்டம் செயல்படுத்தப் பட்ட கிராமங்களின் உணவுப்பழக்கம் என்ன என்று கண்டறியவில்லை.

### கோழிப் பண்ணை

கோழி வளர்ப்புத் திட்டத்திற்குவிதிமுறைகளின் படி பல இடங்களில் உதவித் தொகை வழங்கப் படவில்லை.

சமுதாய சுகாதாரநலத் தொண்டர்கள்பயிற்சிதிட்டம் 1977ம்ஆண்டு முதல் செயல் படுத்தப்படுகிறது. இந்தத் திட்டத்தின்படி 1980-81-ம் ஆண்டில் 160 பேர்களுக்கு பயிற்சி அளித்திருக்க வேண்டும். இந்தப் பயிற்சிக்கு 18 லட்சத்து 16 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டது. இதில் மத்திய அரசின் உதவி 5 லட்சத்து 5 ஆயிரம் ரூபாயாகும். மத்திய அரசு வழங்கிய நிதி உதவியைப் பயன்படுத்தி 46 பேர்களுக்கு மட்டுமே பயிற்சி அளிக்கப்பட்டிருக்கிறது.

1979-ம் ஆண்டு முதல் 1980-ம்ஆண்டுவரைமத்திய அரசு440மருத்துவஉதவிப் பெட்டிகளை அளித்தது. அவற்றில் 134 பெட்டிகள் மட்டுமே பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

இவ்வாறு இந்திய ஆடிட்டர் ஜெனரலின் அறிக்கை குறிப்பிடுகிறது.

# மீசையில் மண்!

ஊழல், ஊழல் என்று உரத்த குரலெழுப்பியும், இறந்தவரைக் காட்டி கண்ணீர் வடித்தும், வகை வகையான போஸ்டர் போட்டும், அணியணியாக தொண்டர்களை இறக்கியும், 'வன்முறை, 'வன்முறை' என்று அவலக்குரல் கொடுததும், நெடும் பயணக் காட்சிகளை படம் பிடித்தும், அடுக்கும் அடாணாவும் அதிரப் பேசியும், இறுதியில் படுதோல்வியடைந்தது தி. மு. க.

ஏன் தோல்வி அடைந்தது?

கரகரத்த தொண்டையில் கவர்ச்சிப் பேச்சும் அழகாக மடல் தீட்டும் எழுத்தும், பம்பரம் போல் பணியாற்றும் சுறுசுறுப்பும் உடைய அதன் தலைவருக்கு வேறு எதையும் விட, 'நான் இருந்த இடத்தில் இந்த முதல்வர் இருப்பதா' என்ற ஒரே எரிச்சல் ஆட்டிப்படைக்கிறது. அதனால் தான் அடுத்து அடுத்து தோல்விகள்! அவலங்கள்! இனி தமிழக அரசியலில் அவர் தலைதூக்கவே முடியாது என்ற முடிவுக்கு சிறந்த அரசியல் நோக்கர்கள் வந்துவிட்டார்கள். புதுதில்லியிலிருந்து கொச்சி வரையில் He is a spent force அதாவது அவரது சக்தி தீர்ந்து விட்டது என்று பலர் எடைபோடுகிறார்கள்.

புரட்சித்தலைவர் இனி தாராளமாக தன் திட்டங்களை அமல்படுத்தலாம். அவரால்தான் தமிழக ஏழைகள் ஏற்றம் பெற முடியும் என்று பலர் என்னிடம் எடுத்துக் காட்டுகிறார்கள்.

எப்படி உங்கள் மாநிலத்தில் அவ்வளவு அமைதி இருக்கிறது? எப்படி மிகச்சிறந்த நிலையான—யாராலும் அசைக்க முடியாத அரசை புரட்சித் தலைவரால் அமைக்க முடிந்தது? அவர் உள்ளம் தங்கமாமே! என்று என்னிடம் பல மாநிலத்துக்காரர்கள் கேட்கும் போது என் நெஞ்சு நிமிர்கிறது! பூரித்துப் பேசுகிறேன்!

சில வடநாட்டு ஏடுகளில் புரட்சித்தலைவரின் புகழ், சாதனைகள் குறித்த செய்திகள் வருகின்றன. நான் நாடாளுமன்றத்து மைய மண்டபத்தில் உட்கார்ந்து கொண்டு பல எம். பி.க்களிடம் நம் தலைவரின் பெருமைகளை, சாதனைகளை பறைசாற்றுகிறேன். கோபாலபுரத்தாரின் வெத்துவேட்டுகளை போட்டு உடைக்கிறேன். எனக்குக் கைவந்த ஆங்கிலம் நன்கு பயன்படுகிறது.

புரட்சித்தலைவரின் சத்துணவுத் திட்டத்துக்கு எதிர்பாராத இடங்களில் இருந்தெல்லாம் வரவேற்பு

**:: ஏ. பி. சனார்த்தனம் எம். பி. ::**

பாராட்டு! சேம நல சர்க்காரின் துடிப்புகளை இந்த திட்டத்தில் காண்கிறார்கள். விவரங்களை ஆவலுடன் கேட்கிறார்கள்.

'ஒரு குடும்பத்தில் ஒருவருக்கு வேலை' என்ற திட்டம் ஆவலுடன் எதிர்பார்க்கப்படுகிறது.

இவையும். நம் பல துறை சாதனைகளும், புரட்சித்தலைவரின் தங்க உள்ளமும் நமக்கு பெரியகுளத்து வெற்றியை எளிதாகத் தேடித் தந்தன.

இனியும் அடுத்தடுத்து நமக்குத்தான் வெற்றிகள்.

புரட்சித்தலைவரின் வெற்றிப் படலங்கள் 1985க்கு பிறகும் தொடர்வது உறுதி.

கோபாலபுரத்து கோயபல்ஸ் இந்த பெரியகுளம் தேர்தலில் தூய்மைக்கு, உழைப்புக்கு தி.மு.க வுக்கு ஓட்டு கிட்டியதாகவும், இதுவே வெற்றி என்றும், இது தொடரும் என்றும் வழக்கப்படி காது நீண்டதை குதிரை என்னும் தன் கதையளப்பில் இறங்கி உள்ளார்.

முடிவு வந்த மூன்று நான்கு நாட்கள் மடல் எழுத திராணி இல்லாமல் இடுப்பொடிந்து கிடந்து விட்டு இப்போது ஒடிந்த உள்ளங்களுக்கு ஒத்தடம் தர புறப்பட்டுள்ளார்.

எத்தனை வக்கணைப் பேசினாலும், எவ்வளவு வாய்ப்பறை கொட்டினாலும், எவ்வளவு தேன் சொட்ட எழுதினாலும் இவரது இதயம் இருட்டுக் குகை. ஆகாதவர்களைப் பழி வாங்குவதில் படுமோசமானது என்பதை நாடு உணர்ந்திருக்கிறது.

பெரியகுளத்தில் தி.மு.க. வுக்கு விழுந்த வாக்குகள் திமுகவுக்கு மட்டுமல்ல, காங்கிரசுக்கு விழுந்திருக்க வேண்டியவைகள். காங்கிரசாராலேயே உள் புகைச்சலால் தி. மு. க. வுக்கு திருப்பி விடப்பட்டவை என்பதை அரசியல் போக்குகளை கண்டவர்கள் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

எத்தனை எத்தனை ஆயிரம் வேற்று முகாம் ஓட்டுகள், தி. மு. க. வுக்கு வந்து சேர்ந்தன என்பதை எண்ணிப்பார்த்தால் தர்மபுரி 1967, என்று தன் கட்சிக்காரர்களையே திசை திருப்பி போலி உற்சாகம் தந்து முட்டாள்களின் சுவர்க்கத்துக்கு Fools paradise அழைத்துச் செல்கிறார்கள் என்பது தெரிய வரும்.

1967 வேறு, அண்ணாவின் பக்குவங்கள் இராசதந்திரம் வேறு, அன்றைய நிலை வேறு என்பதை அனைவரும் அறிவர்.

தன் ஆணவத்தால், அரசியல் அரைவேக்காட்டுத்தனத்தால், தன் இமாலயத் தவறுகளால் படுதோல்வி கிடைத்தது. இனியும் தான் தலைமை தாங்கி கெடுக்க விரும்பவில்லை என்று ஒப்புக் கொண்டு வெறும் பிரச்சாரத்துக்கு மிச்ச நாட்களை செலவு செய்வது தான் புத்திசாலித்தனம் என்பதை தோழர் கருணாநிதிக்கு எடுத்துக் காட்டுகிறேன்.

நாங்களெல்லாம் அரசியல் அறியாதவர்கள், தாங்கள் தான் பிளேட்டோவின் பேரப் பிள்ளைகள், அரிஸ்டாட்டிலின் வாரிசுகள் என்ற ஆணவம் தொடர்ந்தால் நிச்சயம் பலப்பல பெரியகுளங்கள் காத்திருக்கின்றன.

புரட்சித்தலைவரின் இதய அரசியல் இந்த நாட்டை வெகுவாகக் கவர்ந்திருக்கிறது. அவரது உத்திகள், உறுதிகள், திட்டங்கள், இவை இந்த நாட்டு ஏழைகளின் நலனுக்காக இருக்கிற வரையில் அவரது புகழ் வளர்வதை இந்த மிடாத் தவளையால் தடுக்க முடியாது.

பெரிய குளத்தில் தோற்று. மண் கவ்வி, அத்தனைபேரும் இவர் இனி ஆட்சிக்கு வரவே முடியாது. இரண்டாவது இடமதான் இவருக்கு என்று கணித்துவிட்ட பிறகும் தோழர் கருணாநிதி 'மீசையில் மண் ஒட்டவில்லை, நாங்கள்தான் வெற்றி அடைந்தோம்' என்று மார் தட்டுவது மனநோயாளியின் பிதற்றல் என்று தான் முடிவு கட்ட வேண்டும். தலையில் தேய்த்துக் கொள்ள எலுமிச்சம் பழம்தான் தேவை!

ஆடிய ஆட்டம், பழிவாங்கிய படலங்கள், நல்லவர்கள் மீது சீறியது, தமிழ் பண்பாட்டுக்கு வெடி வைத்தது, அத்தனையும் இன்று அரசியல் குப்பைத் தொட்டியில் தள்ளிவிட்டு 'அடிப்பியோ உங்கப்பன் மவனே, சிங்கண்டா!' என்று புலம்பும் நிலைக்கு வந்து விட்டது.

யார் ஜெயித்தது, உங்கள் திராவிடப் பாரம்பரியம்தானே என்று ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் நாம் இவர் அண்ணாவின் தம்பி என ஏற்றிருப்போம்.

எடுத்ததற்கெல்லாம் எதிர்ப்பு தெரிவித்து, பல்லி, தேள், அரணை என்று கூச்சல் கிளப்பி, நலல திட்டத்தையும் பழிக்கும் பாதகர்களை தாய்க்குலம் மன்னிக்காது. ஏழைக் குழந்தைகளின் சத்துணவு திட்டத்துக்கு இடக்கு செய்பவர்கள் தமிழ்ப்பண்பாட்டுக்கு, வள்ளுவருக்கு பகைவர்கள்.

இனி என் இதயம் ஏழைகளுக்கே, அவர்களுக்கே துடிப்பேன், என்று செயல்படும் புரட்சித்தலைவரின் சேம நல திட்டங்கள் அவருக்கு உலகப் புகழ் தரப்போகின்றன.

நாக்கும் பேனாவும் நாசகாரி வேலைக்கா? பொறுப்பான எதிர்க்கட்சித் தலைவர் என்றால். நல்லவைகளை வரவேற்க வேண்டாமா? ஓயாமல் தாக்குவதால், எடுத்ததற்கெல்லாம் கிளர்ச்சி செய்வதால், இவர் போக்கே இப்படித்தான் என்ற சலிப்பு மக்களுக்கு ஏற்பட்டு விட்டது.

இதே பெரியகுளத்தில் இவர் வென்றிருந்தால் இந்நேரம் எவ்வளவு எம்பியிருப்பார்! பச்சை தோல்வியையே வெற்றி என்னும் இந்த வெத்து வேட்டு உண்மை வெற்றி என்றால், "இழிந்தது குல்லா, கலைந்தது வேடம்! தாய்க்குலம் என்னிடம்! உலக உச்சியில் நான்!" என்று ஜனாதிபதி ரீகன் காது செவிடுபட ஆட்டம் போட்டிருப்பார்.

புரட்சித்தலைவர் லட்சோப லட்சம் இளைஞர்களை, "வெற்றி விழாக்கள் வேண்டாம், பிறகு பார்த்துக் கொள்வோம்" என்று தடுத்துவைத்தார்.

பொறுமை, பொறுப்பு, அடக்கம், முதிர்ச்சி, இவைகள் அவரை உயர்த்துகின்றன. புதுதில்லியில் அவரது புகழ் பாடுவது என் இனிய தொண்டு. பெரியகுளம் 1985-ல் நாம் தான் வெல்லப் போகிறோம் என்பதை பறைசாற்றி விட்டது. நம் தொண்டர்கள் அடக்கமுடன், உறுதியுடன், புத்துணர்ச்சியுடன், உவகையுடன் இருப்பது கண்டு நான் 10.15 ஆண்டுகள் இளமை முறுக்கு பெற்றிருக்கிறேன். எனக்கு இப்போது வயது 62 அல்ல 52.

நம் நல்ல திட்டங்களுக்கு நாடு ஆதரவு தருகிறது. புரட்சித்தலைவரின் தாய் உள்ளம் வெல்கிறது என்ற உயர்வு வடபுலத்தில் நெஞ்சு நிமிர்ந்து பேச எனக்கு தெம்பு தருகிறது.

வாழ்க புரட்சித்தலைவர்!

வெல்க நம் நல்லணிகள்!!

## மதுரை குடிநீர் பிரச்சினை தீர புரட்சித்தலைவர் அவசர ஏற்பாடு:

# அதிக குடிநீர் சப்ளைக்கு அரசு கூடுதல் நிதி



## மேயர் பட்டுராஜன் தகவல்

**மதுரை, அக். 24- மதுரை நகர குடிநீர்ப் பிரச்சினையைத் தீர்க்க புரட்சித்தலைவர் அவசர உத்தரவு பிறப்பித்தார். அத்துடன் அரசு கூடுதல் நிதியும் ஒதுக்கியுள்ளது இத் தகவலை மேயர் பட்டுராஜன் தெரிவித்தார்.**

மதுரை மாநகராட்சி மேயர் பட்டுராஜன் நிருபர்களிடம் பேசுகையில் கூறியதாவது:—

மதுரை நகரில் குடிநீர் பிரச்சினை கடுமையாக உள்ளது என்று கூறுவது தவறானது. பிரச்சினை ஓர் அளவிற்கே உள்ளது. மதுரை நகர மக்கள் தொகை 9 லட்சம்.

100 லட்சம் காலன் குடிநீர் தினசரி சப்ளை செய்யப்படுகிறது.

ஆழ் குழாய்க் கிணறுகள் மூலம் 65 லட்சம் காலன் சப்ளை செய்யப்படுகிறது.

குழாய் இல்லாத பகுதிகளுக்கு 12 லாரிகள் மூலம் குடிதண்ணீர் வழங்கப்படுகிறது.

மின் அழுத்தம் குறைவு காரணமாக. நீர் ஏற்றும் பம்புகள் சில சமயங்களில் செயல்பட முடியாத நிலை ஏற்படுகிறது. அதை சரிக்கட்ட நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

அரசடிப் பகுதியில் இருந்து செல்லூர் பகுதிக்கு குடிநீர் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

குடிநீர் பிரச்சினையை உடனடியாகத் தீர்க்கும்படி புரட்சித் தலைவர் உத்தரவிட்டுள்ளார். அதிக அளவு குடிநீர் வழங்க எல்லா ஏற்பாடுகளையும் செய்வதில் முதல்வர் அக்கறை கொண்டுள்ளார்.

அதன் தொடர்ச்சியாக ரூ 18 லட்சம் செலவில் 3 ஜெனரேட்டர்கள் வாங்க அரசு அனுமதித்துள்ளது.

1200 மில்லியன்கன அடி நீர் வழங்கத் திட்டங்கள் தீட்டிச் செயல்படுத்தப்பட்டு வருகிறது. உடனடியாகக் கூடுதலாக 600 மில்லியன்கன அடி குடிநீர் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

மதுரைகுடிநீர்பிரச்னை குறித்து பரிவோடு முதல்வர் கவனித்து வருகிறார்.

குடிநீர் சப்ளையை அதிகரிக்க கல்லார் அணைத் திட்டமும் நிறைவேற்றப்பட இருக்கிறது. அரசரடியில் இருந்து 15 லட்சம் காலன் தண்ணீர் கூடுதலாக எடுத்து வினியோகிக்க ரூ. 75 லட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு மேயர் பட்டுராஜன் கூறினார்.

★ காங்கிரஸ் தொகுதியில் ரூ. 9 கோடியில் ஆலை தொடங்க கழக அரசு ஏற்பாடு

## கட்சிப் பாகுபாடு பார்க்காமல்

# "தொழில் வளர்ச்சிக்கு முனைப்புடன்பாடுபடும் எம். ஜி. ஆர். அரசு"

## இ.காங்கிரஸ்எம்.எல்.ஏ.மனம்திறந்தபாராட்டு

**புதுக்கோட்டை, அக். 24- கட்சி பேதம் பார்க்காமல், தகுந்த இடத்தைத் தேடிப்பிடித்து புதிய தொழில்களைத் தமிழக அரசு தொடங்குகிறது. தொழில் தொடங்குவதில் எம். ஜி. ஆர். அரசு முனைப்புடன் செயல்படுகிறது என்று இ காங்கிரஸ் எம். எல். ஏ. தங்கவேல்ராஜ் பாராட்டினார்.**

கடலூர் ஒன்றியம் தரகம்பட்டி ஒன்றியத்தின் சார்பில் தொழில் அமைச்சர் திருநாவுக்கரசுக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது. ரூ. 67 ஆயிரம் செலவில் கட்டப்பட்ட தரகம்பட்டி பள்ளிக் கட்டிடத்தை அமைச்சர் திறந்து வைத்தார்.

ரூ.94 ஆயிரம் செலவில் கட்டப்பட இருக்கும் பள்ளிக்கட்டிடத்திற்கு அமைச்சர் திருநாவுக்கரசு அடிக்கல் நாட்டினார். ரூ. 38 ஆயிரம் செலவில் கட்டப்படவிருக்கும் சத்துணவு திட்டத்திற்கான சமுதாய மன்றக் கட்டடத்திற்கும் அமைச்சர் அடிக்கல் நாட்டினார்.

விழாவுக்கு கிருஷ்ணராயபுரம் தொகுதி சட்டமன்ற இ. காங்கிரஸ் உறுப்பினர் தங்கவேல்ராஜ் தலைமை வகித்தார். அவர் பேசுகையில் கூறியதாவது:—

எம்.ஜி.ஆர். அரசு கட்சி பாகுபாடு இல்லாமல் எனது (இ. காங்கிரஸ்) தொகுதியில் மாயனூர் என்ற இடத்தில் ரூ. 9 கோடி செலவில் சிமிண்டு குழாய்கள், மற்றும் ஆஸ்பெஸ்டாஸ் தகடுகள் உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஒன்றை அமைக்க முன்வந்திருப்பதைப் பாராட்டுகிறேன். இதன் மூலம் சுமார் 4 ஆயிரம் பேருக்கு வேலை வாய்ப்பு ஏற்படும்.

(பலத்த கைதட்டல்)

எங்கே தொழில் தொடங்குவதற்கான சாத்தியக்கூறுகள் உள்ளனவோ அங்கே தொழில் தொடங்குகிறது இந்த அரசு. அது எந்தக் கட்சி வெற்றி பெற்ற இடம் என்று பார்க்காமல், முறைப்படி தொழில் தொடங்குவது ஒரு நல்ல அம்சமாகும்.

தொழில் வளர்ச்சியில் எம். ஜி. ஆர். அரசு கொண்டுள்ளமுனைப்பை இது காட்டுகிறது.

இவ்வாறு இ.காங்கிரஸ் எம். எல். ஏ. தங்கவேல் ராஜ் பேசினார்.



# கிருஷ்ணா நதி நீர்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சந்தித்ததைத் தொடர்ந்து தமிழக பொதுப் பணித்துறை அதிகாரிகள் ஹைதராபாத்திற்கு வந்து என்னைச் சந்தித்தனர். கிருஷ்ணாநதி நீர்த் திட்டம் பற்றி விவாதித்தனர். ஒப்பந்தம் பற்றி பேசினர். அநேகமாக இரு மாநில அதிகாரிகளுக்கும் நகல் ஒப்பந்தம் திருப்தி தருகிறது என்றே கருதுகிறேன் என்று விஜய பாஸ்கரரெட்டி கூறினார்.

## ரூ. 350 கோடி

சென்னை நகருக்குக் கிருஷ்ணா நதி நீர் கொண்டு வரும் திட்டத்தினை செயல்படுத்த தமிழக அரசுக்கு மட்டும் மொத்தம் 350 கோடி ரூபாய் செலவாகும் என்று தற்போது மதிப்பிடப்பட்டுள்ளது.

இந்தத் திட்டத்தினை ஆந்திர மாநில எல்லைக்குள் செயல்படுத்த தமிழக அரசு தனது பங்காக 130 கோடி ரூபாய் கொடுக்க வேண்டும்.

ஆந்திர மாநில எல்லையிலிருந்து சென்னை நகரம் வரை கால்வாய் அமைத்தல். குழாய்கள் அமைத்தல் போன்ற பணிகளுக்காக 250கோடி ரூபாய் செலவாகும்என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

எத்தனை கோடி செலவானாலும் சென்னைப் பெரு நகர மக்களுக்கு கிருஷ்ண நதி நீர்கொண்டு வந்து கொடுப்பது என்று புரட்சித் தலைவர் உறுதி கொண்டிருக்கிறார்.

# புரட்சித்தலைவர் தகவல்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

—இவைகளைஎல்லாம்ஒரு போருக்கு வேண்டிய ஏற்பாடு போல செய்துவிட்டு என்னைத் தூக்கி எறிந்தார்கள் என்ற குறிப்பைக் கண்டேன்.

கழகம் தொடங்கிய போது அச்சம் ஏற்படவில்லை. பிறகு எந்த அடிப்படையில் கழகத்தைத் துவங்கினோமோ அதை செய்து அதற்காக என் நண்பர்களை வாய்ப்பாக பயன்படுத்துக் கொள்ள வேண்டும்—

அண்ணாவின்கொள்கைகளை எப்படி எல்லாம் நிறைவேற்றப் போகிறோம் என்ற அச்சம்தான் ஏற்பட்டது.

இப்போது கழகத்தில் இணைந்தவர்கள் புதிதாக வந்து இணையவில்லை. ஏற்கெனவே நீங்கள் இருந்திருக்கிறீர்கள். உங்கள் எண்ணம் அண்ணா தி.மு.க. வின் கொள்கையில் தான் இருந்திருக்கிறது.

அதனால் தான் இங்கே ஒருவர் பேசும் போது இதை தாய்க்கழகம்என்று கூறினார். கருணாநிதியும் தன் கட்சியை தாய்க்கழகம் என்கிறார். மறுக்கவில்லை.

தாய் நோய் வாய்ப்பட்டு வீட்டைநிர்வாகிக்க முடியாத நிலை ஏற்படும்போது அந்தப் பொறுப்பை மற்றவர்கள் ஏற்று தாயையும் காப்பாற்றுவது போல கருணாநிதியையும் சேர்த்து காப்பாற்றும் பொறுப்பு கழகத்திற்கு இருக்கிறது.

**இந்தி எதிர்ப்பு போராட்டம்-சாதி உணர்வு போராட்டம் போன்றவற்றில் கருணாநிதி கலந்து கொள்கிறார் என்றால். அவர் மீது வேண்டுமென்றே பழி சுமத்தும நிலை வருமாயின் அவரைக் காப்பாற்றும் பொறுப்பு கழகத்திற்கு உண்டு.**

இந்தக்கழகத்தை துவக்கிய போது என்னோடு வந்தவர்கள் வேறு அரசியல் கட்சியிலிருந்து வந்தவர்களல்ல.

நான் அங்கு (தி. மு. க. வில்) இருந்த போது என்னை அண்ணன் எம்.ஜி.ஆர். என்றோ, மக்கள் திலகம் எம். ஜி. ஆர், என்றோ அழைத்தவர்கள் தான் வந்தனர்.

இங்கே ஒரு தாய் எனக்கு மாலை அணிவித்துவிட்டு "ஏழைகளைக் காப்பாற்றுங்கள் அது போதும்" என்று கூறினார். அந்தத் தாயை நான் இதுவரை பார்த்ததில்லை. அவர் கட்டி இருக்கும் சேலையைப் பார்க்கும் போது வசதியான குடும்பத்தை சேர்ந்தவராக தெரியவில்லை. ஆனால் அவர் "ஏழைகளைக் காப்பாற்றுங்கள் — அதுபோதும்" என்று கூறினார்.

65 லட்சம் குழந்தைகளுக்கு சத்துணவு அளித்து வருகிறோம். குடும்பத்திற்கு இரண்டு, மூன்று குழந்தைகள் என்றாலும் பல லட்சம் குடும்பங்களின் பொறுப்பை குறைத்திருக்கிறோம்.

ஆனால் பத்திரிகையில் உணவில் பல்லிவால் விழுந்து விட்டது என்கிறார்கள்.

எங்கே என்று கேட்டால் ஒன்றும் இல்லை.

எங்கு பார்த்தாலும் பல்லி விழுகிறது என்கிறார்களே தவிர வேறு ஏதும் இல்லை.

இப்படி தவறாகக் கூறி தடுப்பதால் யாருக்கு லாபம்?

மக்கள் இந்தத் திட்டத்தை வேண்டாம் என்பார்களா?

விபத்து நடக்கிறது என்பதற்காக ரயிலிலோ பஸ்சிலோ, விமானத்திலோ போகாமல் இருக்கிறோமா?

பல்லி விழுந்து விட்டது என்பவர்கள்எதுஎதற்கோ ஊர்வலம் போகிறார்கள். இதற்கு ஊர்வலம் நடத்தி சம்பந்தப்பட்டவர்கள் மீது நடவடிக்கை எடுங்கள் என்கிறார்களா?

மக்கள் ஒத்துழைப்பின்றி எதையும் வெற்றிகரமாக நடத்தமுடியாது.

குறை சொல்வதற்கும் ஓர் ஆள் இருக்க வேண்டும். அப்போதுதான் நாம் சிந்திக்க முடியும்.

ஆனால் குறை கிடைக்காதா என்று அலையும் போதுதான் இதை வைத்து தன் கட்சியை வளர்க்கநினைக்கிறார்கள் என்பது புரிகிறது.

குழந்தைகளுக்கு உணவு அளிக்க வேண்டும் என்பது அவர்கள் கட்சிக் கொள்கை இல்லையா?

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

**(புரட்சித்தலைவரின் மீதிப் பேச்சு நாளை வெளிவரும்)**

புரட்சித்தலைவர் வழங்கினார்

# சுரேந்திரன் குடும்பத்துக்கு ரூ. 20 ஆயிரம் உதவி நிதி

**சென்னை, அக். 24—** எதிர்க்கட்சியினரின் வன்முறையால்உயிரிழந்த சென்னை எம்.ஜி.ஆர். நகரைச் சேர்ந்த கழகச் செயல்வீரன் சுரேந்திரன் குடும்பத்துக்கு. உதவி நிதி 20 ஆயிரம் ரூபாயை விழா மேடையில் புரட்சித்தலைவர் வழங்கினார்.

# அண்டே முன்னிலையில் கழகத்தில் இணைந்த 125 தி. மு. க.- இ. காங்கிரசார்



சென்னை, அக். 24— மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் அண்டே முன்னிலையில் தி.மு.க. இ.காங்கிரஸ் ஆகிய கட்சிகளிலிருந்து விலகி 125 பேர் கழகத்தில் சேர்ந்தனர்.

அமைச்சர் அண்டே தஞ்சை மாவட்ட சுற்றுப் பயணம் மேற்கொண்ட போது 25 தி.மு.க.வினர் அந்தகட்சியிலிருந்துவிலகி கழகத்தில் இணைந்தனர். தஞ்சை மாவட்டம் வல்லத்தைச் சேர்ந்த டி.கே.டி கண்ணுசாமி, முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்திற்கு ரூ. 101 நிதி வழங்கினார்.

அப்போது கழகப் பேச்சாளர் அய்யம்பேட்டை அஜீஸ் உடன் இருந்தார்.

வடஆற்காடு மாவட்டம் வேலூர் பொதுக் கூட்டத்தில அமைச்சர் அண்டே கலந்து கொண்டபோது இ.காங்கிரசைச் சேர்ந்த அல்லாபக்‌ஷத், தஸ்தகீர், அக்பர், அக்தர் பேக், தாஜின் பாஸ், கருணாகரன், அமீர்பாய் ஆகியோர் உட்பட 100 பேர் கழகத்தில் இணைந்தனர். அவர்களுக்கு மாலை அணிவித்து அமைச்சர் வரவேற்றார்.

வேலூர் நகர் 34-வது வட்ட செயலாளர் எஸ். விஸ்வநாதன் முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்திற்கு அமைச்சர் அண்டேயிடம் ரூ. 25 வழங்கினார்.

## கழகத்தில் இணைந்த தி. மு. க. தொழிற்சங்க பிரமுகர்

மதுரை, அக். 24— மதுரை, முகவை மாவட்ட திராவிட பொதுத் தொழிலாளர் முன்னேற்ற சங்க செயலாளர் ஆர்.வி.ராமசாமி தி.மு.க.விலிருந்து விலகி மதுரை மாநகர் மாவட்ட செயலாளர் மதுரை எஸ். பாண்டியன் முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தார்.

அப்போது மாநகராட்சி கழக உறுப்பினர் தமிழ்மணி, தளபதி சாதுராசன், பாவலர் தமிழவேள் பாவலர் சாமிநாதன், வெடி சண்முகம் மற்றும் பலரும் உடன் இருந்தனர்.

# மின் ஊழியர் தேர்வில் புதுவை மந்திரி ஊழல்

## சட்டசபையில் குற்றச்சாட்டு

பாண்டிச்சேரி, அக். 24- பாண்டிச்சேரி மின்சாரத் துறையில் ஊழியர்களை தேர்வு செய்ததில் பெரும் ஊழல் நடந்திருப்பதாக எதிர்க்கட்சித் தலைவர் உத்திரவேலு சட்டசபையில் கடுமையான குற்றச்சாட்டுகளைக் கூறினார். அமைச்சர் சவுரிராஜன்தான் இந்த ஊழலுக்குப் பொறுப்பாளி என்றும் உத்திரவேலு கூறினார்.

பாண்டிச்சேரி சட்டசபையில் மின்சாரத்துறை அமைச்சர் எஸ். சவுரிராஜனுக்கும், எதிர்க்கட்சித் தலைவர் உத்திரவேலுவுக்கும்கடுமையான வாக்குவாதம் நடந்தது.

மின்சாரத்துறையில் கட்டுமானப்பணி உதவியாளர்களை வேலைக்கு அமர்த்தும் விஷயத்தில் மாபெரும் ஊழல் நடந்திருக்கிறது என்று உத்திரவேலு குற்றம் சாட்டினார். ஏராளமான பணம் வாங்கிக் கொண்டு உதவியாளர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் என்றும் அந்த வேலைக்காக பல குடும்பத்தினர் தங்களது உடமைகளை விற்று பணம் திரட்டி அதைலஞ்சமாகக்கொடுத்திருக்கிறார்களென்றும் அவர் கூறினார்.

### நிரம்பி வழியும் லஞ்ச ஊழல்

இந்த பணிக்கான ஆட்கள் வேலை வாய்ப்பு அலுவலகங்கள் மூலம் தேர்ந்தெடுக்கப்படுவதில்லை என்றும், ஆகவே தான் இத்தகைய ஊழல் பேரம் நடந்திருக்கிறது என்றும் உத்திரவேலு கடுமையாகக் குற்றம் சாட்டினார்.

புதுவை சிவில் சப்ளை இலாகாவில் லஞ்சமும் ஊழலும் நிரம்பிவழிகிறது என்று ஜனதாத்தலைவர் உத்திரவேலு உறுப்பினர் பெத்தபெருமாள். இந்திய கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் க. வி. ராகவன் ஆகியோரும் குற்றம் சாட்டினார்கள்.

இந்தத் துறையில் முறைகேடுகள் வளர்ந்து விட்டன என்றும் அவர்கள் புகார் கூறினர்.

## போலீஸ் அதிகாரி முன் தங்கபாலு ஆஜர்

கடலூர், அக். 24— மோசடி புகாரில் சம்பந்தப்பட்ட இளைஞர் காங்கிரஸ் தலைவர் தங்கபாலுவும், அவரது தம்பி சுந்தர்ராஜனும் சென்னை உயர்நீதி மன்றத்தின் உத்தரவின்படி கடலூர் மாவட்ட குற்றப்பிரிவு இன்ஸ்பெக்டர் முன்பு ஆஜராயினர்.

அரபுநாட்டில் வேலை வாங்கித் தருவதாக விருத்தாசலத்தை சேர்ந்த 4 பேரிடம் 48 ஆயிரம் ரூபாய் மோசடி செய்ததாக தங்கபாலு, அவரது தம்பி சுந்தர்ராஜன் மற்றும் மங்கலம் பேட்டை மின் ஊழியர் ராமதாஸ் மீதும் கடலூர் குற்றப்பிரிவு போலீசில் புகார் செய்யப்பட்டது.

அந்தப் புகாரை யொட்டி போலீசார் ராமதாசைக் கைது செய்தனர். இதற்கிடையில் தங்கபாலுவும், சுந்தர்ராஜனும் சென்னை உயர்நீதி மன்றத்தின் முன் ஜாமீன் பெற்றனர். முன் ஜாமீனில் அவர்கள் இம்மாதம் 23ந்தேதி கடலூர் குற்றப்பிரிவு இன்ஸ்பெக்டர் துரைசாமி முன்பு ஆஜராகவேண்டும் என்று குறிப்பிடப் பட்டிருந்தது. அதன்படி தங்கபாலுவும், சுந்தர்ராஜனும் நேற்று இன்ஸ்பெக்டர் முன்பு ஆஜராயினர்.

## பஞ்சாலை ஊழியர் ஸ்டிரைக் நடத்தினால் நெசவாளர் பாதிப்பு

### அமைச்சர் அரங்கநாயகம் எச்சரிக்கை

சென்னை, அக். 24— பஞ்சாலைத் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்தால், தமிழகத்தில் உள்ள நூல் உற்பத்தி பாதிக்கப்பட்டு நெசவாளர்களும் கஷ்டப்படுவார்கள் என்று கல்வி, கைத்தறி அமைச்சர் அரங்கநாயகம் எச்சரிக்கை விடுத்தார்.



தென்னிந்திய நூல் விற்பனையாளர் சம்மேளனத்தின் ஆண்டு விழா சென்னையில் நடைபெற்றது.

அமைச்சர் அரங்கநாயகம் விழாவைத் துவக்கி வைத்துப் பேசியதாவது:-

போனஸ் சம்பந்தமாக கோயம்புத்தூர் பஞ்சாலைத் தொழிலாளர்கள் அடுத்த மாதம் வேலைநிறுத்தம் செய்யப் போவதாகதெரிவித்திருப்பது வருத்தப்படத்தக்க விஷயம்.

பஞ்சாலைத் தொழிலாளர்கள் வேலை நிறுதத்தில் ஈடுபடுவார்களேயானால் நூல் உற்பத்தி பெரும் அளவுக்கு பாதிக்கப்பட்டு அதனால் நெசவாளர்களும் பாதிக்கப்படுவார்கள். கைத்தறித் துணி உற்பத்திக்கும் பாதகம் ஏற்படும்.

### வேலை நிறுத்தம் வேண்டாம்

ஆகவே வேலைநிறுத்தத்தில்பஞ்சாலைத்தொழிலாளர்கள் ஈடுபடவேண்டாம் என்று எச்சரிக்கிறேன். வேலை நிறுத்தத்தை தவிர்ப்பதற்கு பலவழிகள்உள்ளன என்பதை நான் நம்பிக்கையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆந்திர மாநிலம் மற்றும் சில வடமாநிலங்களில் உள்ளதைப் போல பருத்தி நூலுக்கு விற்பனை வரியில் இருந்து விலக்களிக்க வேண்டும் என்று இந்த சம்மேளனத்தின் தலைவர் பொன்னம்பலம் பேசுகையில் கோரிக்கை விடுத்தார். இது பற்றி நான் முதல்வர் புரட்சித்தலைவரிடம் தெரிவிப்பேன் என்பதை இங்கே உறுதியுடன் சொல்ல விரும்புகிறேன்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

சீக்கியர் கிளர்ச்சி:

## அமிர்தசரஸ் சிறையில் கைதிகள் வெளியேற்றம்

அமிர்தசரஸ், அக். 24- பஞ்சாபில் சீக்கியர்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

இந்த அகாலிதள சீக்கியர்களை சிறையில் வைக்க உத்தரவிடப்பட்டிருக்கிறது.

கிளர்ச்சி செய்யும் சீக்கியர்களை அமிர்தசரஸ் மத்திய சிறையில் அடைக்க இடம் அளிக்கும் வகையில் ஏற்கனவே அந்தச் சிறையில் உள்ள இதர கைதிகள் வேறு இடத்துக்கு அனுப்பப்பட்டு இருக்கிறார்கள்

லெபனான் விவகாரம்:

## மத்திய அமைச்சர் டூனிசியா பயணம்

புதுடெல்லி, அக். 24— லெபனானில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடி நிலைமையை விவாதிப்பதற்காக கூட்டப்பட்டுள்ள கூட்டுச் சேரா நாடுகளின் மாநாடு டூனிசியாவில் நடைபெறவிருக்கிறது.

இந்த மாநாட்டில் கலந்து கொள்ள மத்திய வெளிவிவகார அமைச்சர் நரசிம்மராவ் புதுடெல்லியிலிருந்து விமானம் மூலம் புறப்பட்டுச் சென்றார்,

## தீபாவளி பண்டிகை: நவம்பர் 15 அரசு விடுமுறை

சென்னை, அக். 24— தீபாவளிப் பண்டிகையை முன்னிட்டு நவம்பர் மாதம் 15-ந்தேதி அரசு விடுமுறை என்று தமிழக அரசு அறிவித்துள்ளது. ஏற்கனவே நவம்பர் 14-ந் தேதி தீபாவளிப் பண்டிகையை யொட்டி அரசு விடுமுறை என்று அரசு அறிவித்திருந்தது. அரசுக்கு வந்த பல கோரிக்கைகளை வைத்து நவம்பர் 15ந் தேதி அரசு விடுமுறை என்று தமிழக அரசு தற்போது அறிவித்துள்ளது.





தமிழ்நாடு மின் வாரிய கணக்கு அதிகாரிகள் சங்கத்தின் சாபில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனிடம் முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்திற்கான நிதி வழங்கப்பட்ட போது எடுத்த படம்.

தென்னாற்காடு மாவட்டத்தில்

# ரூ.1.82 கோடி செலவில் 180 துணை சுகாதார நிலையங்கள்

கடலூர் அக் 24. தென்னாற்காடு மாவட்டததில் 1 கோடியே 82 லடச ரூபாய் செலவில் 180 துணைசுகாதார நிலையங்கள் மற்றும் 87 மேற்பார்வையாளா குடியிருப்புகள் டேனிஷ் நிறுவன உதவியோடு கட்ட முடிவு செய்யப்பட்டுள்ளது.

தென்னாற்காடு மாவட்டக் கலெக்டர் சந்திரலேகா நிருபர்களிடம் கூறியதாவது:

டானிடா சுகாதார திட்டத்தின் கீழ் 1 கோடியே 82 லட்ச ரூபாய் செலவில் 180 துணை சுகாதார நிலையங்கள் மற்றும் 87 மேற்பார்வையாளர்கள் குடியிருப்புகள் கட்ட திட்டமிடப் பட்டுள்ளது.

மாவட்டத்தில் கள்ளச் சாராயம் காய்ச்சுவதைத் தடுக்க தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன.

தமிழ்நாடு தடுப்புக் காவல் சட்டப்படி கள்ளச் சாராயம் காய்ச்சியதாக 3 பேர் கைது செய்யப் பட்டு காவலில் வைக்கப் பட்டுள்ளனர்.

## 10 ஆயிரம் ஏக்கர்

தற்போது 6 ஆயிரம் ஹெக்டர் நிலத்தில்சம்பா பயிரிடப்பட்டுள்ளது. இந்த மாத இறுதிக்குள் மேலும் 10ஆயிரம் ஹெக்டர் நிலத்தில் சம்பா பயிர் சாகுபடி முடிவடையும் என எதிர்பார்க்கப்படுகிறது.

இவ்வாறு கலெக்டர் சந்திரலேகா கூறினார்.





# இளகிய மனமும் இறுகிய இதயமும்!

மணியாச்சி ரயில் நிலையத்தில்— முதல்வர் புரட்சித்தலைவர் மீது கத்தி வீசியதாகத் தொடரப் பட்ட வழக்கில் வீரபராக்கிரம பாண்டியனுக்கு 8 வருட ஜெயில் தண்டனை விதிக்கப்பட்டது.

முதல்வர் புரட்சித்தலைவரின் வேண்டுகோளை ஏற்று, அந்தத் தண்டனையை ரத்து செய்து வீர பராக்கிரம பாண்டியனை விடுதலை செய்யுமாறு கவர்னர் உத்தரவிட்டார்.

இதை வைத்துக்கொண்டு இரண்டு நாள் அரசியல் நடத்தி விட்டார் கருணாநிதி,

புரட்சித்தலைவரின் இந்த நடவடிக்கையை "திசை திருப்பும் வேலை" என்று முதலில் பிரச்சாரம்.

உயர்நீதி மன்ற அப்பீலில் வீரபராக்கிரம பாண்டியன் விடுதலை செய்யப்படுவார் என்பதை உணர்ந்து கொண்டதால்தான், எம். ஜி. ஆர். இந்த நடவடிக்கையை எடுத்தார் என்று அப்புறம் ஒரு பல்டி.

கருணாநிதி முதலமைச்சராக இருந்தபோது.

அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் இவருக்கு டாக்டர் பட்டம் கொடுப்பதற்கு எதிர்ப்புத் தெரிவித்த மாணவன் உதயகுமார் படுகொலை செய்யப்பட்டான்.

அவனது பிரேதத்தைப் பார்த்து கதறியழக் கூட முடியாத நிலையில் அவனது பெற்றோரின் வாயை கருணாநிதியின் அதிகாரம் அடைத்தது.

அது மட்டுமல்ல.

தனது முழு அதிகாரத்தையும் முறைகேடாகப் பயன்படுத்தி உதயகுமாரின் பெற்றோர்களை மிரட்டி-

"இது எங்கள் மகன் உதயகுமார் அல்ல" என்று சொல்லச் சொன்ன புண்ணியவானும் இவர்தான்.

உதயகுமாரின் தம்பிக்கு அரசில் வேலை தருவதாகவும் உதயகுமாரின் குடும்பத்துக்கு நிலம் தருவதாகவும் ஆசை வார்த்தைகளைக் கூறி அந்தக் கொலையை அப்படியே மூடி மறைக்க முயன்ற மூர்க்கத்தனமும் கருணாநிதி ஆட்சிக்குத்தான் சொந்தம்.

★

கழகச் செயல்வீரன் பூலாவரி சுகுமாரனையும், அவனது தந்தையையும் கருணாநிதி ஆட்சியில் தி.மு.க. படுபாவிகள் சுட்டுக்கொன்றார்கள்.

கொன்றது மட்டுமல்ல; அவர்களது கண்களைத் தோண்டினார்கள் — மாறு கால் மாறுகை வாங்கினார்கள்;

கொலையாளி எனக் கூறப்பட்டவர் வீட்டைத் துப்பறியும் நாய் அடையாளம் காட்டியும் அந்த நபர் கைது செய்யப்படவில்லை.

அப்போதைய ஐ. ஜி.யைக் கூப்பிட்டு, "இந்தக் கொலை விவகாரத்தில் போலீசார் தீவிரம் காட்ட வேண்டாம்" என்று உத்தரவிட்ட பெரிய மனிதரும் கருணாநிதிதான்.

கொலையாளி எனக் கூறப்பட்ட நபரைத் தனது பாதுகாப்பில் வைத்திருந்ததும் கருணாநிதிதான்.

ஒரு கொலையில் — "இவன் எங்கள் மகன் அல்ல" என்று சொல்லும்படி பெற்றோரை மிரட்டிய அரக்கத்தனம்—

சுட்டுக்கொன்று — கண்களைத் தோண்டி— மாறுகால், மாறுகை வாங்கிய கோரக்கொலையில்—

குற்றவாளிகளைத் தப்பிக்கச் செய்ய முழு முயற்சி!

—இவை கருணாநிதியின் நடவடிக்கைகள்.

தன்னை நோக்கிக் கத்தி வீசிய நபருக்கு, தானே விரும்பி விடுதலை பெற்றுத் தருகிறார்— இது புரட்சித்தலைவரின் நடவடிக்கை.

இந்த இரண்டு செயல்களிலிருந்தும் தெரிவது—

புரட்சித்தலைவருக்கு இருப்பது இளகிய மனம்!

கருணாநிதிக்கு இருப்பதோ இறுகிய இதயம்!

இந்த லட்சணத்தில் முதல்வர் புரட்சித் தலைவரின் இரக்கத்தன்மைக்கு மாசு கற்பிக்கும் மடத்தனம் வேறா?



## ஜைல்சிங் அக்டோபர் 31-ல் டெல்லி திரும்புகிறார்

புதுடெல்லி, அக். 24— இருதய அறுவை சிகிச்சை பெற்ற ஜனாதிபதி ஜைல் சிங் இம்மாதம் 31-ந் தேதி டெல்லி திரும்புகிறார். அவர் 29-ந் தேதி காலைஹூஸ்டனிலிருந்து நியூயார்க்குக்கு புறப்படுகிறார். மறுநாள் மாலை நியூயார்க்கிலிருந்து ஆம்ஸ்டர்டாம் வழியாக இந்தியாவிற்கு வருகிறார். 31-ந் தேதி இரவு 10 மணிக்கு அவர் டெல்லி வந்து சேருவார்.

## விளம்பர கம்பெனிக்கு பரிசு

சென்னை, அக். 24— புதுடெல்லியில் நடைபெற்ற 13-வது ஏசியன் அட்வர்டைசிங் காங்கிரஸ் விழாவில் நடப்பு ஆண்டில் பொதுநல சேவை செய்யும் பொருட்டு சிறப்பாக செயல்பட்ட "கிளாரியன் அட்வர்டைசிங் சர்வீஸ் லிமிடெட்" நிறுவனத்திற்கு "மேக்ஸ் லீவ்ஸ்" நினைவுப் பரிசு வழங்கப் பட்டது. அந்தப் பரிசை அந்தநிறுவனத்தின் உதவி சேர்மன் சுப்ரட்டோ சென்குப்தா பெற்றுக் கொண்டார்.

# எம்.ஜி.ஆருக்கு உள்ள அரசியல் பின்னணி என்டிராமாராவுக்குஏது

## ஆந்திர முதல்வர் கேள்வி

சென்னை, அக். 24. முதல்வர் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆருக்கு இருக்கும் அரசியல் பின்னணி தெலுங்கு தேசக்கட்சியின் தலைவர் என். டி. ராமாராவுககு ஏது என்று ஆந்திர முதலமைச்சர் காட்டமாகக் கேட்டார்.

அண்மையில் ஏற்பட்ட மழை, புயலால் ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த கடற்கரைப்பகுதிகள் சேதத்துக்குள்ளாயின. நெல்லூர் மாவட்டத்தில் பல்வேறு பகுதிகளைச் சுற்றிப் பார்த்துவிட்டு சென்னை வந்த ஆந்திர முதலமைச்சர் விஜய பாஸ்கரரெட்டி நேற்று நிருபர்களிடையே பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:

ஆந்திர மாநிலத்தில் இருந்து கிருஷ்ணா நதி நீரை தமிழகத்துக்கு கொடுப்பதில் நாங்கள் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். கொடுப்பது கொஞ்சம் அளவு நீராக இருப்பதால் ஆந்திர மக்களுக்கு பாதகம் ஒன்றும் ஏற்பட்டுவிடாது.

ஆந்திராவில் இருந்து தமிழகத்துக்கு தண்ணீர் கொடுப்பதற்கு தெலுங்கு தேசக்கட்சியின் தலைவர் என். டி. ராமாராவ்கடும் எதிர்ப்பு தெரிவித்திருப்பது ஒரு வேடிக்கையாகவே இருக்கிறது.

### அரசியல் ஞானம் ஏது?

அரசியல்ஞானம்எதுவும் இன்றி அவர் பேசி வருகிறார். தமிழக முதலமைச்சர் எம்.ஜி.ஆரைப் போல ராமாராவுக்கு அரசியல்பின்னணிகிடையாது. மக்கள் பிரச்சினைகளையும் தெரிந்து கொள்வதில் அவருக்கு வாய்ப்புஏற்படவில்லை. நீண்டகாலம் சினிமாவில் நடித்துக்கொண்டிருந்து விட்டு அப்படியே நேராக அரசியலுக்கு வந்து விட்டவர்தான் இந்த என். டி ராமாராவ்.

### ஒப்பிட்டுப் பேசுவதா?

மனிதாபிமான அடிப்படையில் ஆந்திரமாநிலம் தமிழகத்துக்கு தண்ணீர் கொடுக்க முன் வந்ததை புரிந்து கொள்ளும் அரசியல்ஞானம்ராமாராவுக்கு கிடையாது.

தமிழக முதல்வர் எம். ஜி. ஆர். நீண்ட நெடுங்காலமாக பொது மக்களின் சேவையில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர். அவரையும் என்.டி.ராமாராவையும் ஒப்பிட்டுப் பேசுவது சரியானது அல்ல.

இவ்வாறு ஆந்திர முதல்வர் விஜயபாஸ்கர் ரெட்டி பேசினார்.

## மின் கட்டணத்தை உயர்த்த கேரள அரசு முடிவு

கோட்டயம், அக். 24— கேரள அரசின் பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்க மின் கட்டணத்தை உயர்த்த முடிவு செய்திருப்பதாக கேரள முதல்வர் கருணாகரன் கூறினார். உள் மாநிலத்தில் பயன்படுத்தும் மின் கட்டணமும், வெளி மாநிலங்களுக்கு விற்கும் மின் சாரத்தின் கட்டணத்தையும் உயர்த்தப் போவதாகவும் அவர் கூறினார். அத்துடன் பஸ் கட்டணத்தையும் உயர்த்த இருப்பதாகவும் அவர் சொன்னார்.

ஏழை மக்களை பாதிக்காத வகையில் கட்டண உயர்வு இருக்கும் என்றும் அவர் குறிப்பிட்டார்.

பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்க மத்திய அரசிடம் நிதி கேட்கப் போவதாகவும் கருணாகரன் கூறினார்.

மேட்டூர்அணையிலிருந்து

## காவிரி டெல்டாவிற்கு அதிக நீர்சப்ளை

திருச்சி, அக். 24— மேட்டூர் அணையிலிருந்து காவிரி டெல்டா பகுதிக்கு விடும் தண்ணீரின் அளவு தற்போது அதிகமாகியுள்ளது. கடந்த வெள்ளிக்கிழமை யன்று அணையிலிருந்து வினாடிக்கு 7408 கன அடி தண்ணீர் வெளியே விடப் பட்டது. சனிக்கிழமை மாலை வினாடிக்கு 12,058 கனஅடி தண்ணீர் வெளியேவிடப்பட்டுள்ளது. அணையின் நீர் மட்டம் 21.95 அடியாகும் அணைக்கு வினாடிக்கு 2,822 கனஅடி நீர் வருகிறது.

சுமுகமான பேச்சு வார்த்தைக்கு அரசு உதவும்:

# போனஸ், தொழில் தகராறு பிரச்னையில் வன்முறை கூடாது

## தமிழக அரசு கடும் எச்சரிக்கை

சென்னை. அக். 24. தொழில் தகராறு. போனஸ் பிரச்சினைகளில் வன்முறை சம்பவங்கள் நடப்பதை அரசு பார்த்துக் கொண்டிருக்காது சம்பந்தப்பட்டவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்கும் என்று தமிழக அரசு எச்சரிக்கை விடுத்திருக்கிறது.

தமிழக அரசு வெளியிட்டுள்ள ஒருபத்திரிகைக் குறிப்பில் இது குறித்து கூறப்பட்டுள்ளதாவது:—

தொழிலாளர்பிரச்னைகள் சம்பந்தமாக சில இடங்களில் அசம்பாவிதமான சம்பவங்களும், வன்முறைச்சம்பவங்களும் நடந்துள்ளன.

கிண்டியில் உள்ள ஒரு தொழிற்சாலையில் இருந்து தொழிலாளர்கள் வெளியே வராமல் அந்த தொழிற்சாலையின் கதவுகளை சாத்திவிட்டு நெருப்பு வைக்கப்பட்டுள்ளது.

அதிகாரிகள் இருந்த அறைக்குதிவைக்கப்பட்டதால் அந்த அதிகாரிகள் படுகாயம் அடைந்து தீப் புண்களுடன் மருத்துவமனையில் அனுமதிக்கப் பட்டுள்ளனர். மணலியில் உள்ளமற்றொரு ரசாயன தொழிற்சாலையின் அதிகாரி ஒருவர் கொலை செய்யப் பட்டுள்ளார்.

### கடும் நடவடிக்கை

இந்த வன்முறைச் சம்பவங்கள் கடும் கண்டனத்துக்குட்பட்டவை. தொழில் தகராறு சம்பந்தமான பிரச்சினையில் இப்படிப்பட்ட வன்முறைச் சம்பவங்கள் நடப்பதை அரசு பார்த்துக் கொண்டிருக்காது. கடுமையான நடவடிக்கை எடுக்கும்.

தொழில் தகராறுபிரச்சினைகளைபேச்சுவார்த்தை மூலம் தீர்த்துக்கொள்ளும்படி தொழிலாளர் சங்கத் தலைவர்கள் மற்றும் நிர்வாகத்தினரை அரசுகேட்டுக்கொள்கிறது.

இருதரப்பு பேச்சு வார்த்தை வெற்றி பெறாமற்போனால் அரசாங்கத்தை அணுகி தீர்வு காணலாம். அதற்கான உதவிகளை அரசு செய்யும்.

இவ்வாறு பத்திரிகைக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

Published by K.Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road. Madras-600 029. Editor: E. PARASURAMAN.